[31st August 1961

DEPUTY SPEAKER : Questions 1548 and 1549 may be taken up together.

*Municipal Engineer (Vellore)*

* 1548 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN and SRI M. P. SARATHI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகர சபையில் வேலைபார்க்கும் இன்ஜினியர் அவர்கள் எத்தனை வருட காலமாக வேலை பார்த்து வருகிறார் ?

(இ) சட்டப்படி எத்தனை வருடம் ஒருவர் ஒரு இடத்தில் வேலை பார்க்கலாம் ?

(உ) இவருக்கு மட்டிலும் விதிவிலக்கு என் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) The Municipal Engineer has been at Vellore since 9th August 1956;

(இ) and (உ) Normally, an officer is not disturbed before the completion of a term of three years in one station. But on administrative grounds, it is open to the Government to transfer an officer within that period or to retain him beyond that period.

* 1549 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகரசபையில் வேலைபார்க்கும் என்ஜினியர் அவர்கள் பேரில் 50 குற்றச்சாட்டுகளைக்கொண்ட ஒரு மனு ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களிடம் கொடுக்கப்பட்டதா ?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) Yes, Sir.

(இ) A report has been called for from the Chief Engineer, Public Works Department (General), Madras, on the several allegations contained in the petition. His report is awaited.

SRI V. K. KOTHANDARAMAN : பல குற்றச்சாட்டுகளுக்குக் காரணமாயிருக்கும் ஒரு என்ஜினியர் சுமார் ஐந்தாறு வருட காலமாக ஒரே இடத்தில் இருந்திருக்கிறார். ட்ரான்ஸ்பர் வரும்போதெல்லாம் அதைக் 'கான்ஸல்' செய்யக்கூடிய அளவுக்கு அமைச்சர் அவர்கள் தலையிடுவதன் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பல குற்றச்சாட்டுகளுக்கு அவர் காரணம் என்று கூற முடியாது. பல குற்றச்சாட்டுகள் அவர் மீது கூறப்பட்டிருக்கின்றன. அவை இப்பொழுது பரிசீலனையில் இருக்கின்றன.

SRI P. U. SHANMUGAM : குற்றச்சாட்டுகளை விசாரிக்கும்போது அந்த உத்தியோகஸ்தரை அங்கே வைத்துக்கொண்டு விசாரிப்பது அவ்வளவு முறையல்ல என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அவரை வேறு இடத்திற்கு மாற்றிவிட்டு அவர்மீதுள்ள குற்றச்சாட்டுகள் பற்றி விசாரிக்கப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர்கள் அங்கிருந்து மாற்றப்பட்டிருக்கிறார்.

SRI M. P. SARATHI : வேறு இடத்திற்கு மாற்றப்பட்டிருந்தாலும், இப்பொழுது மூன்றுமாத லீவில் வேலூரிலேயே இருந்துகொண்டு, இந்தப் புகார்களை இல்லாமல் செய்வதற்கான வேலையைச் செய்துகொண்டு வருகிறார்களே, அது அமைச்சருக்குத் தெரியுமா ?

31st August 1961]

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : லீவில் இருக்கும் போது அவர் என்ன செய்கிறார் என்பதற்கு அரசாங்கம் உத்தரவாதமாக இருக்க முடியாது ?

SRI V. K. KOTHANDARAMAN : இந்த இன்ஜினியர் அங்கிருக்கும் ஆளும் கட்சியைச்சேர்ந்த வசதி படைத்த ஒரு சிலருக்குச் சாதகமாக இருக்கிறார் என்கிற காரணத்திற்காக வேண்டி, இதுபோன்று அவருக்கு வந்த ட்ரான்ஸ்பர் ஆர்டர்களைக்கூட கான்சல் செய்வதற்கான முயற்சி செய்யப்பட்டது என்பது உண்மையா ? இனிமேலாவது தயவுசெய்து நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஆளும் கட்சி—எதிர்க் கட்சி என்று வேற்றுமைப்படுத்திப் பேச கனம் அங்கத்தினர் இதைப் பயன்படுத்துகிறாரே தவிர, அதற்கு ஆதாரம் இல்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : I object to the insinuation made. "இனிமேலாவது மனைவியை அடிக்காமல் இருப்பாரா ?" என்று கேட்பது போல், "இனிமேலாவது நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா"? என்று கனம் அங்கத்தினர் கேட்கிறார். It looks as if we have not been straight-forward or just till now. I am sorry the hon. Member always indulges in such insinuations.

DEPUTY SPEAKER : The Engineer has been transferred. What is the use of putting supplementaries? We shall pass on to the next question.

*Minor Port for Athirampattinam*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 1550 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*1550 *Q.*—SRI A. R. MARIMUTHU : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா அதிராம்பட்டிணத்தில் கடலில் படகுகள்மூலம் சாமான்கள் போக்குவரத்துக்காக சிறு துறைமுக வசதி செய்ய உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

*Secondary Education Bill*

* 1551 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state when the secondary Education Bill is likely to be introduced in the Assembly?

THE HON. SRI C. SUBRAMANIAM : The matter is under consideration and it is not possible to indicate the time of introduction.

SRI M. KALYANASUNDARAM : அக்டோபர் 2-ந் தேதி ஜில்லா போர்டுகள் மறைந்துவிடும். அதன் பிறகு ஜில்லா போர்டுகள் இருந்தாலும் பிரயோஜனம் இல்லை. இதுவரைக்கும் ஜில்லா போர்டு நிர்வாகத்தில் இருந்த உயர்நிலைப் பள்ளிகள், புதிய சட்டம் நிறைவேறுகிற வரையில், எப்படி நிர்வகிக்கப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றின் விவரங்கள் வேண்டுமானால் கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் சொல்ல முடியும்.